

கடவுள் துணை.

---

அர்ச். மரியமதலையம்மாள்
கோட்டைப்பாளையத்தில்
திருக்கோயில்கொண்டெழுந்தருளிய

# வரலாறும்,

கௌரீ குலாதிபக் கப்பால் நாயுடு அவர்களின்

# குடும்ப வரலாறும்.

இஃது
அத்திமாநகர் முத்தமிட் கவி வித்வான்
மாஜி எஸ். ஆரோக்கியசாமிநாயுடு அவர்களின்
புத்திரருளொருவரும்,
வித்வான்
வெண்பாப்புலி A. பவுல்குரூஸ்நாயுடு அவர்களின்
சோதாருளொருவருமான

**A. பொன்னுசாமி நாயுடு அவர்களால்**

இயற்றப்பெற்று,
கௌரீ குலாதிபச் செல்வன் புதுவை ஸ்ரீமான்
தர்மராஜ் கொண்டப்பா செட்டியாரென்றழைக்கும்
சவியே தெ கொண்டப்பா அவர்களால்
பதிப்பிக்கப்பட்டது.

---

ஆனந்தா பிரஸ், புதுவை.

**1929.**



கடவுள் துணை.

---

அர்ச். மரியமதலேயம்மாள்

கோட்டைப்பாளையத்தில் திருக்கோயில்கொண்டெழுந்தருளிய

# வரலாறும்,

கௌரீ குலாதிபக் கம்பால் நாயுடு அவர்களின்

# குடும்ப வரலாறும்.



இஃது

அத்திமாநகர் முத்தமிட் கவி வித்வான்

மாஜி எஸ். ஆரோக்கியசாமிநாயுடு அவர்களின்

புத்திரருளொருவரும்,

வித்வான் வெண்பாப்புலி A. பவுல்குரூஸ்நாயுடு அவர்களின்

சோதரருளொருவருமான

A. பொன்னுசாமி நாயுடு அவர்களால்

இயற்றப்பெற்று,

கௌரீ குலாதிபச் செல்வன்

புதுவை

ஸ்ரீமான் தர்மராஜ் கொண்டப்பா செட்டியாரென்றழைக்கும்

சவியே தெ கொண்டப்பா அவர்களால்

பதிப்பிக்கப்பட்டது.

---

ஆனந்தா பிரஸ், புதுவை.

1929.

# முன்னுரை.

---

எங் கௌரி குலாதிபச் செல்வர்களே!

இற்றைய வரையிலுமில்லாத இப்புதிய சரிதை யொன்று இப்
பொழுதெப்படி வெளிவந்ததோவெனப் பலரும் பலவாறு சிந்திப்
பாராயினும், இது பாரம்பரியமாக எம் பெரியோரால் சற்றேறக்
குறைய 30 வருடங்களுக்கு முன்னரேயே என் தந்தை முத்தமிழ்
ரத்நாகரம் S. ஆரோக்கியசாமிநாயுடு அவர்களின் செவ்வாயால்
பலமுறை செப்பக் கேட்டுப் பாடமாயிருந்த வொன்றும்; ஆனால்
அடியேன் இக்கோட்டைப்பாளையத்திற்கு என்சிறு வயதிலுற்றவன்,
அப்பொழுதெனக்கு வயது பன்னிரெண்டேயாகும். அதன்பிறகே
எனக்கு இது என் தந்தையாற் சொல்லப்பட்டது. அப்பொழுது
யான் மலையாள தேசமாகிய கொச்சி ராச்சியத்தில் பாலக்காட்டை
யடுத்த அத்திமாநகரில் வசித்துவந்தேன். பின்னர் யான் கடந்த
1917-ம் ஆண்டில் இக்கோட்டைப்பாளையம் உரோமான் கத்தோ
விக்குப் பாடசாலைக்கு (R. C. School) ஹெட்மாஸ்டராக அமைந்
தேன். அதுவரையில் வெளிவராதிருந்த இச்சரிதையை, இக்கம்பால்
நாயுடு அவர்கள் குடும்பத்துதித்து வயோதிபராயிருந்த மாஜி சின்ன
நாயுடுவெனும் அய்யனுநாயுடு அவர்களை விசாரித்தும், கோட்டை
மேடு இருந்த விடத்தையும், காரடியான் கோயிலையும், எல்லைப்
பிடாரி கோயிலையும் பார்வையிட்டும், வைரிசெட்டிப்பாளையத்தி
லிருந்த எனது பங்காளி வகையில் மூத்தோரான 70 வயதுடைய
எனது தமயனுரான முத்துநாயுடு அவர்களையும் அவரது தம்பி
இஞ்ஞாசிமுத்துநாயுடு அவர்களையும், மற்றும் பெரியோர்களையும்
விசாரித்து அறிந்தமட்டில் சென்னையில் பிரசுரமான "பொதுநலம்"
என்னும் பத்திரிகையில் வெளியிட்டேன். அன்றியும், இக்கம்பால்
நாயுடு அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்தோர்கள் இதைக் கவனிக்
கும்படியாயும் கேட்டுக்கொண்டேன். எனினும் எவரும் இதைப்
பற்றிக் கேட்க முன்வந்தாரில்லை. இறுதியாக, இவ்வர்ச்சியசிஷ்ட
மரியமதலையம்மாளின் உற்சவத்தை முன்னிட்டு இவ்வம்மை யிக்
கோட்டைப்பாளையத்துற்ற வரலாற்றை வெளியிட்டுப் புதுவைக்கும்,
பெங்களூருக்கும், மற்றும் பல ஊர்களுக்கும் ஆயிரக்கணக்காக
அனுப்பிவைத்தோம்; அதைப்பற்றியுங் கேட்பாரில்லை.

கடைசியாகக் கடந்த 1928-ம் ஆண்டு டிசம்பர்மாதம் 16-ந்தேதி மிக்க அன்புடன் இப்பதிக்கு வந்திருந்த கௌரி குலாதிபச் செம்மல் புதுவை ஸ்ரீமான் தர்மராஜ்கொண்டப்பசெட்டியாரென வழைக்கப்படும் சவியே தே கோண்டப்பா வெனும் பெருந்தகையார், இவ்வம்மையின் சரிதையைக் கேட்டுப் பூரித்தவராய், சவிஸ்தாரமாயிதனை யெழுதித் தமக்கு அனுப்பிவைக்கும்படி பேராவலுடன் கேட்டுக்கொண்டதைக் கண்ட அடியேன், இதைக் கேட்பாருமறிய விரும்புவாருமில்லையே என்ற பெருந் துக்கத்திலிருந்த எனக்குப் பெரும் புதையலகப்பட்டதேயெனக்கொண்டு, உள்ளபடி யெங் குலாதிபர்கள் அறியாக்குறையே கவனியாதிருப்பதின் காரணமெனக்கொண்டும் இதை யெழுத முன்வந்தேன். ஆகையால், "என் மகனே கம்பால்! இனி பயப்படாதே!" யெனக் கூறிய தேனொழுகுந் திவ்ய மொழியும் உள்ளபடி பயன்பெறும் காலமிதுவேயெனத் தேறக்கிடக்கின்றது.

ஆயினும், இச்சரிதைக்கு என் வாய்மொழியன்றி வேறு ஆதாரமில்லையோவென அநேகர் ஆயாசப்படலாம். ஆனால் என்ன செய்வது? நம் பெரியோர்கள் இதைக் கர்ண பாரம்பரையாய்ச் சொல்லிவந்துள்ளார்களேயன்றி எழுதிவைத்தார்களில்லை. அன்றியும் அக்காலத்திலிருந்த சங்கைக்குரிய குருமார்களும் ஒரு சில குறிப்பு வைத்திருந்தார்களாயினும் அவ்வளவு தெளிவாயுமில்லை. வருடங்கள் முன்பின் முறண்பாடாகவிருக்கின்றன; ஏனெனில் அக்காலத்திலிருந்தவர்கள் சேசுசபை சுவாமிமார்களே. அவர்கள் பறையவும், கோவாக் குருக்கள் வந்தார்கள். பின்னர் 1840-50-ம் ஆண்டில் அந்நியதேச வேத போதகச் சபையாரே இக்கோட்டைப்பாளையத்தின் ஆதீனக் கர்த்தாக்களானார்கள். அவர்களால் குறித்துவைக்கப்பட்டதை 1898-ம் ஆண்டு "மிஷன் சரிதைக" ளெனப் பிராஞ்சு பாஷையிலச்சிடப் பட்டுள்ள பெரிய புத்தகத்தில், நம் பெரியோரான கம்பால்நாயுடு அவர்கள் மதுரை விட்டதும் உப்புலியபுறமுற்றதும் 16-ம் நூற்றுண்டின் பிற்பகுதியென வரையப்பட்டுள்ளது; இது நம் பெரியோர்கள் கூற்றுக்கு ஒத்துவருகிறது. ஆனால் அவர்கள் ஞானஸ்நானம் பெற்றது 1717-ம் ஆண்டிலென்றும், புறத்தாக்குடியிலென்றும் வரையப்பட்டுள்ளது ஒத்துவரவில்லை. நம் பாரம்பரை 16-ம் நூற்றுண்டின் கடைசியிலென்றே சொல்லியுள்ளார்கள். அதற்

கிசைய 1711-ம் ஆண்டில் இக்கோயிலுக்கு உபயமாக அன்னமாயி யென்னும் பெண்பால் பித்தளைச் சிலுவைச் சுரூபமொன்று அளித்திருக்கின்றார்கள். ஆகையால் ஞானஸ்நானம் 16-ம் நூற்றாண்டினிறுதி யென்பதே தகுதி. 1717-ம் ஆண்டில் சங். சவரியார் சுவாமியார் 6 தூண்களமைந்த சிறு கோயில் கட்டினாரெனச் சொல்வதும் பொருந்தும். ஆயினும் அக்காலத்தில் புறத்தாக்குடியல்ல, வடுகர் பேட்டையே சுவாமியாரிருந்த இடமென்பதும், அங்குதான் ஞானஸ்நானம் பெற்றார்களென்பதும் பாரம்பரைக் கூற்று.

அதற்கிசைய, அக்காலத்தில் புறத்தாக்குடி ஒரு பங்காயிருந்ததாகச் சேசுசபையாரெழுதிய நந் திரு வீரமாமுனிகளின் ஜீவிய சரிதையில் ஓரெழுத்தேனுங் குறிக்கப்பட்டில்லை. கற்பாளையத்தான் பட்டியையும், கோனான்குப்பத்தையும், ஏலாக்குரிச்சியையுங் குறித்தபோது புறத்தாக்குடியை மாத்திரம் விட்டுவிட நியாயமில்லை. ஆகவே வடுகர்பேட்டையே ஞானஸ்நானம் பெற்றவிடமென்று நிச்சயமாகிறது. பிறகு மேற்படி பிராஞ்சு புத்தகத்தில், சங். தைரியநாத சுவாமிகளே இக்கோயிலை விஸ்தரித்தாரென்பதாக எழுதப்பட்டிருக்கின்றது. சங். தைரியநாத சுவாமிகள் அக்காலத்தில் வடுகர்பேட்டைக்கு வந்துவிட்டாரென்பது அவருடைய ஜீவிய சரிதையில் நன்கு விளங்குகின்றது. (இங்கிலீஷ் புத்தகத்தைப் பார்க்கவும்.) அதன் பின்னரே புறத்தாக்குடி பங்கு ஏற்பட்டுச் சில காலமிருந்ததாகப் பெரியோர்கள் வெகு தெளிவாகச் சொல்லியிருக்கின்றார்கள். எனவே இச்சரிதம் முற்றிலும் உண்மை யென்பதில் எள்ளளவேனுஞ் சந்தேகமில்லை. மேலும், நமதர்ச்சியசிஷ்டவளின் திவ்விய தரிசனையைப்பற்றி மேற்படி பிராஞ்சு புத்தகத்திற் குறிக்கப்படவில்லையே யென்றால், ஒருக்கால் பின் வந்தவர்கள் சற்றேறக்குறைய 200 வருடங்களுக்குப்பின்னரே அச்சிட்டபடியால்,செல்லரித்த குறிப்புகளில் மீதியாயிருந்த பாகத்தையே குறித்தவர்களாயிருந்திருத்தல், அல்லது சந்தேகத்தில் விட்டிருத்தல் முதலிய தவறால் நிகழ்ந்தவையாயிருக்கலாமென்றே எண்ணக்கிடக்கின்றது.

எனவே இச்சரிதை உண்மையென்பதற்கு மேற்குறித்தவையே போதிய சான்றாகும். ஆகையால் நம் மாபெருந்தலைவர்கள் சற்று கண் விழித்துப் பூர்வீக ஸ்தலத்தையும், கோயிலையுந் தக்கபடி பரிபாலிக்

கித்தக்க ஏற்பாடுகளைச் செய்ய முன்வரல் வேண்டும். அப்பழைய குருசிருந்த இடந் தற்போது பாடசாலையாயிருப்பதால், அது இடிக்கப்படுமுன் பழையபடி பீடங்கட்டிப் பழுதுபார்த்து நம் பாதுகாவலியைத் திருப்பீடத்தமர்த்துமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்யாதவரையில் நாம் முன்னேற்றமடைதல் சாத்தியமல்ல; இப்பொழுதோ நாயுடுமார்களில் அநேகர் வெளியேறிவிட்டார்கள்; எஞ்சி இருப்பவர்களும் இவ்வள்வும் நடத்தக்கூடியவர்களாயுமில்லை. மற்ற எல்லா வேலைகளையும்விட இது முக்கியமான வேலையென்பதை நமது மரபினர் கவனித்துப் பாராதது எவர் செய்த தீவினையோ! இன்னு மிப்படியே விடப்பட்டால், அந்தோ! வெகு சீக்கிரத்தில் இவ்வூரில் நாயுடுமார்களின் குடும்பம் அற்றுப்போகுமென்பதை வலியுறுத்துகின்றேன். எனவே செல்வச் சீமான்களே! சற்றே கண் விழித்துப் பாருங்கள். சற்றேறக்குறைய 300 வருடகாலமாய் நம் மனோர்க்குத் தாய்கமாயிருந்த கிராமந் தவிப்பதைக்கண்டும் இரங்காமலிருப்பது நியாயமாகாதென்பதை ஒவ்வொருவரும் சிந்திக்கும்படி மிக்கத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

இன்னுமிதைச் சேர்ந்த மற்ற விஷயங்கள் இரண்டாம் பதிப்பில் வெளிவரும்.

இப்படிக்கு,
கத்தோலிக் கௌரி குலாபிமானி
ஏ. பொன்னுசாமி நாயுடு.

---

புதுவை மகா-ா-ா-ஸ்ரீ
சவியே தே கோண்டப்பா செட்டியாரவர்களுக்கு விடுத்த
திருமுகப் பாசுரம்.

—

வெண்பா.

எண்டிசையும் போற்று மெழிற்செம்ம லாஞ்சவியேர்
கொண்டப்ப கண்ட...ற் குலையாதோ — வண்டார்
மதலைம்ரி யம்மன் மகிழ்கோயிற் கோதுகள்
விதிவிதியென் றேடும் விரைந்து.

திருமுகப்பாசுரம்.

உலகுயிர்கள் வினைதீர ஒருமரந் தனிலேறி உயிரதை விடுத்த பரமன்
ஒப்பற்ற திருவடியை முப்போது மறவாத முத்தமிட்குஞ் சாமதாம்
ஓங்குநற் புகழ்பெற்ற வாரோக்ய சாமிதரு முத்தமக் கனிஷ்ட புத்ரன்
ஓதரிய வெண்பாப் புலிக்கு ரூஸ்சோதரன் உயர்பொன்னு சாமிநிருபம்
பலமணிகள் கலகலெனத் தினமுறை குலாதிபன் பகர்கௌரி மாபிலுற்றோன்
பன்னரிய மென்மதுர வாக்கிய சிலாக்கியன் பார்புகழ் படைத்தசீலன்
பகருமக் கௌரீ குலத்தவரை யீடேற்றப் படியதனி லுற்றபாவை
பல்லோர் புகழ்ந்திடுங் கம்பால்ய நாயுடு படுதுயர் துடைத்தசீலி
இலகுகோட் டைப்பாளை யந்தனி லெழுந்திடு மெம்மதலை மரியனைக்கே
இணையற்ற நவமணிக ளேயொளிரு கற்பீட மியற்றவாக் குறுதிதந்தோன்
ஏரார் முகத்தினன் சீரார்த வத்தினன் எளியோர்க் கிரங்குதாரன்
இல்லையென் னுமலே யள்ளிக் கொடுப்பவன் இருநிதி படைத்தவள்ளல்
நலமுரு வெடுத்தன்ன வந்தகொண் டப்பனிரு நல்விழி குளிர்ந்து கண்டால்
நல்லச்சி லேறிவிளை யாடுமித் தலமகிமை நற்றவர் புகழ்ந்தேற்றவே
நாடினேன் பன்னூறு புத்தக மளிப்பையேல் நங்குலா திபர்கண்மற்றோர்
நாளுநாளுந் துதித் தேற்றியே போற்றுவர் நன்மகிப ; கண்டுவாழி !

வெண்பா.

அப்பாகொண் டப்பா வருண்மிகவே பெற்றப்பா
தப்பா துதவிபுரி தண்கடலே — எப்போதும்
காத்திருக்கு நம்மதலைக் கஞ்சமலர்ப் பொன்னடிதான்
காத்திருக்கு நிற்கருளக் காண்.

—



கமலதிரு முகவமலி கழலிணை காப்பு.

---

கலி விருத்தம்.

ஏதெ னுய்யான மேயிருந் தோர்மரம்
ஆத முய்வதற் காவரு மம்மரம்
சோதி நாதன்சு மந்தொளிர் தொன்மரப்
பாத மேகெதி யாமெனப் பற்றுவாம்.

வெண்பா.

ஆதி கரத்திருத்தி யாதவனை மேற்பரத்தி
சோதி யுளத்திருத்துஞ் சுந்தரியே — பாதி
மதிமிதித்த மாபதத்தை மாநிலத்தி லெங்நா
வதன்மீது வைத்தருள வா.

பூர்வ காலமுதல் சகல வளங்களு மொருங்கே நிறையப்பெற்ற இப்பரதக் கண்டத்தின் தென்பாரிசமாகிய "தமிழ் நாடு", சேர சோழப் பாண்டியநாடென முப்பிரிவாகப் பிரிக்கப்பட்டு, சேர சோழப் பாண்டிய அரசர்களால் ஆளப்பட்டதென்பதும், நந்தமிழாகிய அமிழ்தினுமினிய தேனொழுகும் பாஷைக்கு முதன்மை பெற்றதும் பாண்டிய நாடன்றோ! அதற்குச் சான்றாக முத. [illegible]டை, கடையென்னும் முச்சங்கங்கள் நிலைபெற்றிருந்தபடியே தற்போதும் செந்தமிழ்ச் சங்கம் நிலவி வருவதும் அம்மதுரையின்கண்ணே யென்பதும் யாரே யறியார். அந்நாட்டைப் பாண்டியர் காலத்திற்குப்பின் அரசாண்ட நாய்க்கர்களில், மிகச் சீருஞ் சிறப்பும் பெற்று என்றுமங்கா பெரும் புகழ் காட்டி நிற்கும் அரும் பெருங் கட்டிடங்களையுங் கூடகோபுரங்களையுங் கட்டியவருமான மகா கீர்த்திவாய்ந்த திருமலைநாய்க்கர் இறந்தபிறகு, சற்றேறக் குறைய ஒரு நூறு வருடத்தின்பின்னர் நமது சரிதை ஆரம்பமாகின்றது.

அம் மதுரைமா நகரின்கண் மிக்க பிரபலம் பொருந்திய முத்து, ரத்னக்கல் வியாபாரியும், பிரபல மிராஸ்தாருமானவரும், சமஸ்தானத்திற்கு வேண்டியவராயுமுள்ளவரும், ஆறு சகோதரர்களையும் ஒரு சகோதரியையுமுடையவருமான கம்பால்நாயுடு அவர்களின் மா

பெருங் குடும்பமொன்று புகழோடு விளங்கியது. மேற்படி குடும்பத்திற் கடைசியாகப் பிறந்தது ஒரு பெண்ணையாகையால், அதை வெகு அருமையாயும் அன்பாயும் வளர்த்துவந்தார்கள். அக் குழவியும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாகவும் வளர்ந்து மிக்க அழகு சௌந்தரியத்தோடு விளங்கினள். வயதேற வேற அழகும் அவளோடுகூட வளர்ந்து, தக்க பருவத்தில் புஷ்பவதியாயினள். அவளது அழகி லீடுபட்டுக்கிடந்த அச்சமஸ்தானாதிபதிகளுள் ஒருவன், நமது பழங்காலத்து அரசர்களின் வழமைபோல, அப்பெண்மணியின் மூத்தோனாகிய நம் கம்பால்நாயுடு அவர்களை அழைத்து, உம்மரிய தங்கையை எனக்கு விவாகஞ் செய்துகொடுக்க வேண்டுமெனக் கேட்டனன். இதைச் செவியுற்றதும் கம்பால்நாயுடு அவர்கள் திடுக்கிட்டு, இது என்றும் நடவாத விஷயமாதலால் புதுக்கால் வெட்டுவது பெருஞ் சங்கடத்திற் கொண்டுவந்து விட்டாலும் விடும்; ஆகவே, எம் ஜாதி ஜனங்களுடன் முற்றிலும் யோசித்து முடிவுகூற வேண்டியிருக்கிறதெனக் கூறக்கேட்ட அவ்வரசன், "இதில் முடிவென்ன? இரண்டொரு மாதத்திற் கலியாணம் நடக்க வேண்டியது; இல்லையென்றால் நாம் சிறைபெடுப்பதுந் தப்பாது. அக்காலத்தில் உமது தங்கையை விவாகமாகவல்ல, வைப்பாகவே வைத்துக்கொள்ளப்படுமென்பதுதான் முடிவு. இதிலுமக்கு எது தகுதியோ வதனைக் கூறிவிடும்" என்றான்.

இதைக் கேட்ட நம் தலைவர் அப்படியே யாகட்டுமென விடை பெற்றுத் தங் குடும்பத்தினருடன் தீர ஆலோசனைசெய்து கடைசியாகத் தாங்கள் ஊரைவிட்டோடுவதே நலமெனக் கண்டனர். அவ்வாறே தங்களுக்கு வேண்டிய விசேஷித்த பொருட்களை எடுத்துக்கொண்டு அம் மாபெருங் குடும்பம் பதினாறாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் இரவுக்கிரவே யாருமறியாதபடி காட்டுவழியாய்த் திருச்சிக்கருகில் காவேரிக் கரையில் செடி புதர்நிறைந்த விடத்தில் தங்குவாராயினர். அச்சமையம், அரியலூரிலிருந்து ஒரு ஆதிதிராவிடன் வேறிடஞ்சென்று பிழைப்பதற்காகத் தங் குடும்பத்தோடு அங்கு வரவே, அவனையுஞ் சேர்த்துக்கொண்டு உப்புலியபுரம் வந்து அங்கு சிலகாலந் தங்கினர். அவ்விடமானது மதுரை, திருச்சி, சேலம் செல்லும் வழியிலிருப்பதாலும், துரையூரானது திருமலைநாய்க்கரே கட்டியதாகையாலும், நாயுடுமார்கள் அதிகப் போக்குவருத்தாய்

இருப்பதாலும், ஒரு சிலகாலம் மறைவிடத்திலிருப்பதே தகுதி யெனக்கண்டு, உப்புலியபுறத்தை யடுத்த ஆற்றின் மேற்கரையில் காட்டைத் திருத்திக் கோட்டைமேடென்னும் பெயரிட்டு ஆங்கு குடியிருந்தனர். இவர்களேயன்றி இன்னுஞ் சிலருங் குடிபுகுந்தனர். அங்கும் வளையல், முத்து, ரத்ன வியாபாரங்களை நடத்திவந்தார்கள். இக்காலத்தில்தான் தங்களோடு கொண்டுவந்த தங்கள் குலதெய்வமான காரடியானையும் மாருடி ஏரிக்கரையிற் குடியிருத்தி வழிப்பட்டு வந்தனர். தங்கள் தங்கையையும் மருங்காபுரியிலிருந்த தம் சொந்தக் காரனுக்கு விவாகஞ் செய்துகொடுத்தனர்; ஏனெனில், எவரும் எளிதிற் கண்டுபிடியாத மலைப்பிரதேசமாயும் காடு செறிந்த விடமாயுமிருந்ததென வறிந்தே அவ்வாறு செய்தனர். இவ்வாறு தங்கையின் விவாகத்தை இரகசியத்தில் மனோற்சாகமாய் நடத்தியபிறகு தம் தம்பிமார்களுடன் தங்கள் வியாபாரங்களை ஆடம்பரமாய் நடத்தி மிக்க செல்வாக்கோடு விர்த்திமுகங் காட்டினர்.

## இரக்ஷண்ய ஆரம்பம்.

தங்கள் செல்வாக்குக்குத் தக்கபடி தங்கள் குலதெய்வமாகிய காரடியானுக்கும் எல்லைப்பிடாரிக்கும் சிறு சிறு கோயில்களுங் கட்டிப் பூசை நைவேத்தியங்களும் பொங்கலும் பலிகளுமிட்டு விசேஷ உற்சவங்களுஞ் செய்தனர். இத்துடன் தங்களை வந்தடைந்தோர்க்கு வேண்டிய உதவி யொத்தாசைகள் பல செய்துவரவே இக்காடான கோட்டைமேடு தினே தினே விர்த்தியாகிக்கொண்டே வந்தது. ஆயினும் அவ்வூரில் மற்றவர்களுக்கெல்லாம் நேரிடாத பயங்கர வியாதியான இரத்தங் கக்குதலும், தவறாது சாவதுமான நோய் ஒன்று இந்த ஆறு குடும்பத்திற் பிறந்த பிள்ளைகளையே பற்றிப் பிடித்தது. பிள்ளைகளும் மூன்று நான்கு ஐந்து ஆறு வயதிற்குள் மடிவதைக் காண எவர்தான் சகிப்பர்! இதினால இக்குடும்பமானது ஆற்றொணுத் துயரடைந்து எப்படி தப்பலாமெனக் கலங்கிச் சஞ்சல சித்தராய், சகுன, சாஸ்திர, கோணங்கி, குறி, ஜோசிய, வைத்தியம், மாந்தரீக முதலிய தந்திர மந்திரங்களை யெல்லாம் பெருந் திரவியச் செலவுடன் செலவழித்தும், தாங்கள்பெற்ற பிள்ளைகள் பிழைப்பதைக் காணுதவர்களாகிப் பரதவித்து நின்றதோடு, தங்கள் ஆடு மாடுகள் கறக்கும் பாலும் இரத்தமாகமாறுவதும் அதை அருந்தாது கன்றுகள்

சாவதுமாயின. என் செய்வார் எம் பெரியார்? தங்களுக்கு இத்துன்ப காலத்தில் உதவிசெய்வாருங் கண்டிலர். கடைசியாக அம்மதுரையிலிருந்த அக்காமுக வரசனே மாந்தரீகர்களைக்கொண்டு பில்லி சூனியம் வைத்துத் தங்களை வதைக்கிறுனென்று தீர்மானித்து அதைத் தடுப்பதற்கெனப் பல வெத்தனங்கள் செய்தும் பணச்செலவானதல்லாமல் பிள்ளை பிழைக்கவில்லையே யென்று மிக்க வருத்தமுற்றவர்களாய்த் தங்கள் வியாபாரங்களையே நிறுத்திவிட்டு மிக்க சோகத்தில் ஆழ்ந்து கிடந்தனர். இச்சமயத்தும், போனதெல்லாம் போக மீதியாக நின்ற தம் ஏகப்புத்திரனும் இரத்தங் கக்குவதைக் கண்ட எம் பெரியாரான கம்பால்நாயுடு அவர்களும், அவரது பிரிய பத்தினியும் அடைந்த துயரத்தை யார்தான் வாய்விட்டுச் சொல்ல முடியும்? ஊரே அழுகையுங் கூக்குரலுமாயின. முட்டிக்கொள்வாரும் மோதிக்கொள்வாரும் அங்கலாய்ப்பாரும் அடித்துக்கொள்வாருமாயிருந்த இச்சமயம் சமய சஞ்சீவியேயென நடு வயதுடைய ஓர் பிச்சைக்காரி, சேலத்திலிருந்து திருச்சி நோக்கிச் செல்லுமவள், ஆற்றில் நீரருந்தவந்த சமயத்தில் இப்பரிதாபக் கூச்சலையும் ஒப்பாரியையுங் கேட்டு ஆங்குசென்று விஷயத்தை யுணர்ந்து தாய் தந்தையர் படுங் கஷ்டத்தைக் கண்டு, குழந்தையிருக்கும் நிலைமையை நோக்கவே ஒரு சிறிதுஞ் சகியாளாய், அக்குழந்தையை வாரியெடுத்து மார்புறத்தழுவித் திரியேக தெய்வத்தை நோக்கி அண்ணார்ந்து பார்த்தவளாய் மிக்க உருகிய இரக்கத்துடன் ஜெபித்து, இக்குழவியை அவருக்கே அர்ப்பணஞ்செய்து, தனக்கு உதவிசெய்யத் தேவதாயையும் மன்றாடிக் குழந்தைக்கு ஞானஸ்நானம் கொடுத்துப் பிள்ளையைக் கிடத்தினள். பிறகு ஆங்கிருந்தவர்க்கு ஆறுதலுந் தேறுதலுஞ் சொல்லிக்கொண்டிருந்த சமயத்தே பிள்ளையும் துயிலினின்றெழுவதுபோல் எழுந்து தன் தாயிடமோடிப் பாலருந்தியது.

இதைக்கண்ட எல்லோரும் ஆனந்தப் பரவசமடைந்தவர்களாய்த் தங்கள் வாய்கொண்டமட்டும் இப்பிச்சைக்காரியைப் போற்றிப் புகழ்ந்து, எங்கள் தெய்வமே இவ்வுருவெடுத்து இச்சமயம் வந்ததென வாழ்த்தி வணங்கி, காளியென்றும் கூளியென்றும், பிள்ளை கலி தீர்க்கவந்த பெண்தெய்வமென்றும் ஆடிப்பாடி ஆனந்த நிர்த்தனஞ் செய்தனர். அன்று முழுதும் அவளை அவ்விடத்தைவிட்டு அசையவிட்டிலர். அடுத்தநாள் முதற்கொண்டு ஆட்டையும் மாட்டையும்

பிள்ளைக் குட்டிகளையும் தங்களையுங்கூட மந்திரிக்கவேண்டுமென்று மன்றாடினர். அவ்வண்ணமே நம்பிச்சைக்காரியும் அவைகளுக்கு வைக்குந்தீனியைக் கொணரச்செய்து அவைகளையும் மந்திரித்துக்கொடுக்க அவைகளுந்தின்று பரிசுத்தமான தீம்பால் ஈய்ந்தன. இப்படிச் சின்னாள் செல்லத் தான் தம்மூருக்குப் போகவேண்டுமென விடைகேட்கவே, நம்பெரியார் " இது முக்காலும் முடியாதகாரியம் ; பரிதாபமான காலத்தில் ஆபத்சகாயராய் தெய்வமேயென வந்து உயிர்ப்பிச்சை அளித்து எங்களை ஆனந்திக்கும்படிசெய்த உடன்காலிலேயே விட்டுப்பிரிதலை எவ்வாறு சகிப்போம். இன்னுஞ் சின்னாளிருந்து எங்களுக்கு மறுபடியும் இத்தகைய கொடூரமான வாபத்துக்கள் வாராதபடிசெய்து, பிறகு போவதைப்பற்றிப் பேசலாமேயொழிய, இப்போது பேசுவது மிக்க பரிதாபத்திற்கிடமாகு "மென்றனர்.

இதைக்கேட்ட பிச்சைக்காரி, " நீங்கள் சொல்வது முற்றிலுஞ் சரியானாலும் நான் வழிப்போக்கி ; பல பல ஊர்களிற் சஞ்சாரஞ் செய்து உங்களைப்போலவே அவரவர்களுக்குவேண்டிய உதவியொத்தாசைகளைச்செய்ய வேண்டியே நான் உடலெடுத்தவள். தாமதிக்கக்கூடாத விஷயமாய் வடுகர்பேட்டைவரையில் சென்று திரும்பவேண்டும். அங்கு என் குருமூர்த்தியின் திவ்ய தரிசனம் பெறவேண்டிய காலம்கிட்டிவருகின்றது. நீங்கள் இச்சமயம் தடைசெய்வது எனக்கு மீளாத் துயரை உண்டாக்கும் ; ஆகவே விடையளிப்பீ "ரென வேண்டினள்.

இதைச் செவியுற்ற நம் மாபெருந்தலைவர் மிக்க துக்காக்கிராந்தராகி, " அம்மணி! உம்மோடு நாங்களும் புறப்படவேண்டியவர்களே; உம்மைவிட்டுப் பிரிந்து மீண்டும் வரும் பேராபத்துக்களைத் தாங்கச் சக்தியற்றுக் கிடக்கின்றோம். தங்களது அருளால் நாங்களுந் தங்களின் திவ்ய குரு தெரிசனை அடைந்து அவரது பங்கயப்பதமலரை முடிசூட்டி, எங்களது குறைகளை எடுத்துரைத்து இன்னுஞ் சிலகாலம் எங்களோடு உம்மை இருத்தும்படி கேட்டுக்கொள்வோம் ; அன்றியும் அவரது அரிய திருவடிகளைக்கண்டாலே எங்கள்பாவங்கள் நசித்து உய்வோம் ; அந்தத் திவ்யதரிசனமும் எங்களுக்குக் கிடைக்கும்படி திருவருள் புரியவேண்டு " மெனக் கெஞ்சினர்.

அதற்கு அவ்வம்மையார், " ஆம் அப்படியே செய்வோம். ஆயினும், அது இப்பொழுதல்ல. இப்பொழுது பலர் என்னைப்போல

வந்து குழுமிக்கிடப்பர். இக்காலம் எங்களுக்குச் சொல்லவேண்டிய அரும்பெரும் புத்திமதிகளை விசேஷமாக நடக்கும். இது சமயம் ஏனையோர் தரிசனை அடையார். மேலும் நான் வழியிலுள்ள சில ஊர்களில் தங்கித்தங்கிப் போகவேண்டியவள்; குடும்பஸ்தராகிய உங்களை அவ்விடங்களுக்கெல்லாம் அழைத்துச்செல்லுதல் எனக்கழகல்ல. இரண்டொரு மாதம் பொறுத்தால் நானே வந்தழைத்துச் செல்லுவேன், நீங்களினிப் பயப்படவேண்டிய அவசரமேயில்லை" என்றனள்.

இதைக்கேட்ட மற்றவர்கள், "எங்கள் நல்லதாயே! நாங்கள் இரண்டொருவராவது கூடவேவந்து அப்பரமரிஷிகளின் பாதாரவிந்தத்தைப் பணிந்து, அவரது ஆசீர்வாதம்பெற்று உத்தரவடைந்து தங்களைப்பெற்றே மீளுவோம். ஆகையால், ஒரு மூன்றுநாளேனுந் தாமதியுங்கள்" என்றார்கள்.

அதற்கம் பாதுசிரோமணி "எதற்கும் இது காலமல்ல; நான் போனவுடன் இனி எப்பக்கஞ் செல்லவேண்டுமோவென்பதை அவர் முன்னதாகவே நிர்ணயித்திருப்பார். எனக்கங்கு மறுப்பேச்சில்லை. அன்றியும், உங்களுக்கு நான் சொல்லவேண்டியதொன்று உண்டு. நான் கிறீஸ்துவள்; உங்களோடு அநேகநாள் தாமதிப்பது எனக்குத் தப்பிதம். அன்றியும் இதையறிந்தால் உங்கள் ஜாதியினரும் உங்களைத் துவேஷிப்பார்கள். நீங்கள் கிறீஸ்துவர்களாயிருந்தால் எத்தனை நாளாயினும் உங்களோடிருக்கலாம்; ஆகவே இருவழியிலுந் துன்ப வருத்தமில்லாதிருக்க என்னைப்போகவிடுவதே உங்களுக்கும் எனக்கும் உத்தமமென்பதை யறிந்து உத்தரவு கொடுங்க" ளென்றாள்.

இதைக் கேட்டவர்கள், "அதைப்பற்றிக் காரியமில்லை; எங்களினத்தவர்கள் எங்களைத் தள்ளிவிடட்டும், நாங்களுங் கிறீஸ்துவர்களாகிவிடுவோம்; அந்தத் தெய்வத்தின் திருநாமத்தை யுச்சரித்தவுடனேதான் எங்கள் பிள்ளை பிழைத்தது. எங்கள் தெய்வங்களுக்கு வெட்டின கடாய், கோழிகள் கொஞ்சமா? போட்ட பூசைக்கு அளவா? எல்லாம் என்னவாயிற்று? மாந்தரீக மந்திரங்களெல்லாம் மண்ணுப்போய்விட்டனவே, வைத்தியவாதமெல்லாம் வயிற்றுப் பிழைப்பாய்விட்டதே, சகுன சாஸ்திரமெல்லாம் கனவாய்விட்டதே. கைமேற்கண்ட உண்மைப் பலனை இனி மறப்பதுமுண்டோ? மந்திரமேது, தந்திரமேது, எங்களுக்குத் தெரியாமல் ஒன்றுஞ்செய்யவுமில்லையே, உண்மையங் கடவுளென்றால் இப்படியல்லோ ஓடிவந்து

காப்பாற்றவேண்டும். எங்கள் தெய்வங்கள் வெறுங் காரமற்ற கல்லும் மண்ணுந்தான் என்பதிற் சந்தேகமில்லை. “ கைப்புண்ணுக்குக் கண்ணாடியேன் ? ” வேண்டாம், வேண்டாம், நாங்களுங் கிறீஸ்து வர்களேயாவோம். அதற்கு நாங்கள் என்ன செய்யவேண்டும் ? எவ்வளவு செலவாகும் ? தயவுசெய்து சொன்னால் கூடியமட்டும் பார்க்கிறோ ” மென்றார்கள்.

இதைச்செவியுற்ற அம்பட்டமங்கை குலுங்கக் குலுங்கச் சிரித்து “ இதற்குக் காசேது, பணமேது, செலவேது ? எனக்கெவ்வளவு சொந்தமோ அவ்வளவு உங்களுக்கும் அத்தெய்வஞ் சொந்தந்தான்; அதையறியாமல் தேடாமலிருக்கிறீர்கள், நாங்களறிந்து தேடுகிறோம், கூப்பிடுகிறோம்; வருகிறார், கேட்டதைச் செய்கிறார். இவ்வளவுதான் உங்களுக்கும் எங்களுக்கும் வித்தியாசம்; வேறொன்றுமில்லை. நீங்கள் தெய்வமென்று சொல்லுவதெல்லாம் செத்துப்போன மனிதர்களை யன்றி வேறில்லை. இது நீங்களும் அறிந்ததுதானே. நானென்ன பெரும் படிப்பாளியா? உங்களுக்குத் தெரிந்ததில் ஆயிரத்திலொன்று கூட எனக்குத் தெரியாது. ஆகவே, நீங்கள் உண்மையில் உறுதியுள்ளவர்களானால் உங்களுடன் இன்னுஞ் சிலநாளிருந்து, கிறீஸ்துவர்களாய்த்தீட்சைப்பெறுவதற்கான சிலவழிகளை யுங்களுக்குச்சொல்லிக் கொடுத்துக் கையுடன் அழைத்துப்போய்த் தீட்சையுமளிக்கும்படி யென் குருமாமுனிவரைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்வேன். இதைத் தவிர என்னாற் செய்யக்கூடிய உதவி உங்களுக்கு வேறில்லையாகையால் நீங்களெல்லோரும் நன்கு யோசித்து முடிவை இன்றைக்குத் தெரிவித்துவிடுங்கள் ” என்றாள்.

“இதற்கு ஓர் உறுதியும் உடன்படிக்கையும் பத்திரமுந் தேவையில்லை. இங்குமாத்திரமல்ல, மதுரையிலேயே எனக்குக் கேள்வியுண்டு; சொற்ப ஆராய்ச்சியுஞ் செய்திருக்கிறேன். அது முற்றுப் பெற இப்படி நடக்கவேண்டியது அப்பெருமானின் திருவருள் போலும்! எல்லா மவன்செயலேயன்றி வேறென்னவிருக்கின்றது. இதோ கிரம்பூரின் அருகில் மலையின்மேல் வீற்றிருக்கும் பிரசன்ன வெங்கடாசலபதியின் பாதத்தில் ஒருமுறையல்ல பலமுறை விழுந்து கெஞ்சி மன்றாடியும், கணக்கற்ற செலவுசெய்தும் அடைந்த பலன் அருமையான பாலர்களை இழந்ததே. மலை வெறும்மலைதான் என்பது எங்களுக்கு “ உள்ளங்கை நெல்லிக்கனி ” போல் விளங்கிவிட்டது.

ஆகையால் அதைப்பற்றியெல்லாம் இனிப் பேசுவதில் ஒரு பலனுமில்லை. "உப்புக்கண்டம் பறிகொடுத்த பாப்பாத்தி" போலவே ஏமாற்றமடைந்து தவிக்கிறோம். எங்களுக்கு வேண்டியதைக் கற்றுக் கொடும், நாங்களும் படித்துக்கொண்டு உம்முடன்கூடவே வருகிறோமென்பதுதான் முடிவான தீர்மானம்" என்றார் நம்பெரியார்.

அப்படியே அம்மாதரசியும் அன்று முதல் காலையிலும் மாலையிலும் இன்னுமவர்களுக்கு ஒழிந்த நேரங்களிலும் மந்திரம், குறிப்பிடம், ஞானோபதேசங்களுந் தெளிவாகக் கற்றுக்கொடுத்து, மிக்கத் தெளிவுள்ளவர்களாகச்செய்து, எவ்வித சந்தேகமுமறுத்து, அவர்களுக்குத் தன்னாற் கூடியமட்டும் வேத உபதேசங்கள்செய்து, அவர்கள் கேள்விகளுக்கெல்லாந் தெளிவான விடைகள்கொடுத்தும் ஐயமறச்செய்தாள். இவர்களது கடைசித்தம்பி தவிர மற்ற எல்லோரும் ஞானத்தீட்சைப்பெறுவதற்கு அருகரானார்கள். அத்தம்பியுந் தங்கள் குலதெய்வத்தின்மட்டில் பிரீதியுள்ளவனாயிருந்தாலும், அதற்குப் பூசை முதலியவை செய்யாவிட்டால் இன்னும் பெரிய சங்கடத்தில் மாட்டிவிட்டாலும் மாட்டிவிடுமென்று நம்பினதால் அவனை அவனிஷ்டப்படி நடக்க விட்டுவிட்டார்கள். அப்படியே தங்களருமை தங்கைக்கும் இது விஷயந் தெரிந்தால் ஒருக்கால் தடை நேரிடுமென்றும் அறிவிக்காமல் விட்டுவிட்டு மற்றெல்லோருந் தங்கள் தங்கள் குடும்பங்களோடு (ஐந்து குடும்பங்களோடு) வடுகர்பேட்டைசென்று குருமாமுனியைக்கண்டு அடிபணிந்து தங்களுக்கும் ஞானத்தீட்சை யளிக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளவே, அக்காலத்திலங்கு இருந்த சங்கைக்குரிய இராஜரிஷி சவரியார் குருசுவாமியாரவர்கள் அவர்களை மிக்க இரக்கத்துடனேற்றுக்கொண்டு குறிப்பிட முதலிய ஞானோபதேசங்களைச் சோதித்து, அவர்களுக்குப் பின்னுஞ் சில புத்திமதிகளைச் சொல்லி, வேதோபதேசங்கள்செய்து, அவர்கள் கோட்டமெல்லா மறுத்தோட்டி, இனியவர்களுக்கு வரப்போகும் ஞானயுத்தத்தில் முன்னணியிலிருந்து ஜெயமடையும்படிப் பழக்கி, ஞானத்தீட்சையும் அளித்து, இனியுங்களை எவ்விதப் பேய் பிசாசுகளும் வருத்தாது; ஆனால் உங்கள் மனிதர்களே யுங்களைப் பகைப்பதன்றி வேறு பகையில்லையென்று கூறி ஆசீர்வாதமளித்து அன்பு பெருக வழிவிட்டனுப்பினர்.

---

## ஞானயுத்தமும், வடுகர் மாதா வருகையும்.

இவர்கள் என்றுமில்லா அகமகிழ்ச்சியோடு வீடுநோக்கிப் புறப்பட்டுவந்து பழையபடி அவரவர்கள் வேலையை ஆரம்பித்து நடத்தி வந்தாலும், தங்கள் பழைய தெய்வங்களுக்கு முன்போல வந்தனை வழிப்பாடுகள் செய்யாமலும், அவர்கள் அவைகளைப்பற்றி யாதொரு கவலை யெடுத்துக்கொள்ளாமலிருப்பதையுங் கண்ட மற்றவர்கள் முறையிடவும் பேசவுந் தலைப்பட்டுவிட்டனர். இத்துடனிவர்கள் தம்பியும் வெறுக்கவுந் தலைப்பட்டதால், நம் பெரியார் தம் தம்பியை அவர்களுடனே கூட்டிக்கொள்ளவும், தங்களைப்பற்றிக் கவலைகொள்ளாதிருக்கவும் புத்திமதிசொல்லி, அவரிஷ்டத்தின்படியே அவருக்குப் பங்குகொடுத்துப் பிரித்தும்விட்டார். இவைகளையறிந்த தம் மருமகனும் மகளும் வந்து தங்கள் வருத்தத்தையுந் தெரிவித்துக் கொண்டபோது, அவர்களுக்கும் வேண்டிய சீதனங்களைக் கொடுத்தும், தம்பியே இனிமேல் வேண்டியதைச்செய்யவும் ஏற்பாடுசெய்துவிட்டார். என்றாலும், வரப்போவதிலும் ஆட்சேபனையில்லாமல் ஒழுங்குகளைத் தக்கபடிசெய்தனர். இவ்வாறாக மிக்க சமாதானத்துடன் ஒழுங்குசெய்தும், பைசாசங்கள்விடாமல் ஆரம்பித்து, இவர்களுக்குச் செல்வாக்கதிகமாவதையும், ஆடுமாடுகள் பிள்ளைக்குட்டிகள் விர்த்தியாவதையும் வியாபாரம் பெருக்கமடைவதையுங் கண்டு ஒவ்வொருவரும் பொறாமைகொள்ளும்படிச்செய்து இவர்களைவெறுக்கவுந் தூஷிக்கவுந் தொடங்கி ஜாதிக்கட்டுப்பாட்டில் நெருக்கினர். இவர்களெதற்கு மசையாமலும் மிக்கப் பொறுமையோடு நடந்து கொண்டாலும் நடக்கும் பாதை, குடிக்கும் ஆற்றுத்தண்ணீர், அடிக்குங்காற்று, எரிக்கும் வெயில் முதலியவையுந் தீட்டாகிவிடுவது போலும் ஓலமிட்டுப் படாதபாடுபடுத்தினர். இவர்களோடுவந்த ஆதிதிராவிடனது வாழ்வும் ஓங்கக்கண்ட அவர்கள் அவனைத் துரத்தவும் இம்சிக்கவுந் துவக்கினர். அவனும் இவர்களுடன் கூடவே ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டவன். அவனுடன் இவர்கள் பேசுவதும், இவர்களுக்கு வேண்டிய வேலைகள் செய்வதையுங் கண்டு அவனை யெப்படியுந் துரத்திவிடப் பலபாடு படுத்தினர். என்றாலும், "பணம் பத்துஞ் செய்யும்" என்பதுபோல, இச்சாதியாரும் மற்றவர்களிற் சிலரும் இப்படிச் செய்தாலும் மற்றையோர் இவனுக்குக் கொஞ்சஞ்

சனுகாயிருந்தாலும் பணம் வீண் விரயமானதன்றிப் பிரயோசன மில்லையெனக் கண்டு மிக்க தயங்கினர். ஆடுமாடு திருட்டு, கன்னக் களவு, வீண்சண்டை, மனஸ்தாபம் முதலியவைகள் பெருக்கமடைந் தன; வரவரப் பகைமை வளர ஆரம்பித்தது; துவேஷமுந் தூஷிப்பு மதிகமாயின. இது எவ்வளவுக் கதிகமானாலும் நம் மாபெருந் தலைவ ராகிய கம்பால்நாயுடு அவர்கள் அசையாமனதுடையவராய் நின்றாராகி லும், பெண்களும் பிள்ளைக்குட்டிகளும் ஆதி திராவிடனுடைய பரி தாப நிலைமையைக் கண்டு மிக்கக் கலங்கினார்கள். இப்படிச் சிலகாலஞ் சென்ற பின்னர் இவர்களைக் கண்டுகளிப்பான் முன் வந்த பிச்சைக் காரி மறுபடியும்வரவே, இவர்களுடைய துன்பமெல்லாமறந்து இன்ப மடைந்தனர். பக்தியிற் சிறந்த அவ்வுத்தமி இவைகளைக்கண்டு சகி யாததோடு சில நவநாட்களைவைத்துச் செபிக்கலானாள், எனவே பைசாசமுந் தன் வேலையை மிக்க ஆடம்பரத்தோடு துவக்கி யது. அவளும் அதற்குச் சலியாளாய், உபவாசம், ஒருசந்தி, ஜெபம் முதலியவைகளில் பின்னும் பின்னும் ஊக்கத்துடன் மற்றவர்களையும் சேர்த்துக்கொண்டு, மேலும் மேலும் விடா முயற்சியோடு உழைத்த னள். மிக்கக் கடுமையான புயலிலகப்பட்டுக்கொண்ட நாவாயாகத் தவிக்கும்படிவந்தது. அம்மாதரசி, உங்களுக்கு நற்காலம்வரவே இவ் வளவுப்நடக்கிறபடியால் அஞ்சேல்! அஞ்சேல்! என்று அபயங்கொடுத் துக்கொண்டே நின்றனள். இச்சமயம் இவர்களைவிட்டுப் பிரிதல் எவ்வாற்றானுங் கூடாதெனத் தன் வேலையெல்லாம் விட்டுப் போராடி னள். செம்பொன்னை யுலையிலிட்டுப் புடமிடுவதை யொப்பப் புட மிடப்பட்டனர். இவ்வாறு நிகழ்ந்துவருங் காலத்தில் மிக்க சிந்தாகுல ராய் ஓரிரவு நித்திரை பிடிக்காமல் உருண்டு பிறண்டுகொண்டு படுத் திருந்து வெகு நேரமானபின் அயர்ந்து நித்திரைசெய்தார் நம் மாபெருந்தலைவர்.

அச்சமயத்தில், கோடிசூரியப் பிரகாசமெனத் தோன்றிய இரு மகாராணிகளையெனச் சுத்த வெண்ணுடையணிந்த பெண்மணிகள் தம்முன்னால் நிற்பதையும், அதிலொரு மாதரசி தலையிற் கிரீடமுட னும் புன்முறுவல்பூத்த முகத்துடனும் பக்கத்தில்நின்ற மாமணியைக் கண்சாடைசெய்ய, அப்பாவையும், "என்மகனே! இனி பயப்படாதே! உங்களுடன் நாமிருப்போம். ஆனால் இந்த இடம் தகுதியானதல்ல; இதற்கு மேற்கில் கொஞ்சதூரத்தில் விருலிக்காட்டின் மத்தியில் ஒரு

சிறு சிலுவைதோன்றும் ; அதில் எனக்கொரு கோயில் கட்டி நீங்களும் அப்பக்கத்திலேயே குடியிருப்பீர்களாக''வெனக் கூறி மின்னற்கொடியென மறைந்தனர்கள். இதைக் கண்ட நம் பெரியார், வாரிச்சுருட்டியெழுந்து மிக்க திகிலுடன் ஓடோடியும் அப் பிச்சைக் காரியை அழைத்து, தாம் கண்டதையுங் கேட்டதையும் தம் தம்பிமார்களுக்கும் தம் குடும்பத்தார்களுக்குமறிவித்து, இவர்கள் யாராயிருக்கலாமென வினாவினார். அவ்வுத்தமியும், எம் பரமதாயே கிரீடாதிபதியாய் நின்றவளென்பதில் அற்பஐயமுமில்லை; ஆயினும், பாவிகளின் உத்தமத்தாயும், எம் பரமதாயுடன் சிலுவை யடிமட்டும் விடாதுபற்றியவளும், தபசினாலும் உபவாசத்தினாலும் மிக்க மேன்மைபெற்றவளும், நமது இரக்ஷகாபிரானின் போதனையைச்சாதித்து நின்றவளுமான அர்ச். மரியமதலேனம்மாளே வந்திருக்கவேண்டுமெனவும், எதற்கும் நாளைமுதல் அவ்விடத்தை நாடியோடித் தேடிக் கண்டடைய வேண்டுமென்றுங் கூறினர். அடுத்த நாளே சொன்ன குறிப்பின்படிவந்துகாய்ந்து தீய்ந்து கரையானரித்துக்கிடந்தமரக்குருசைக் கண்டு ஆநந்த நிர்த்தனமாடி, அன்று முதல் தங்கள் வேலையெல்லாம் விட்டுவிட்டுக் காடழித்து முதலில் அச்சிலுவைக்கோர் பந்தலிட்டு, பிறகு தங்களுக்கு மதன்பக்கத்திலேயே வீடுங்கட்டிக் குடியிருக்கத் தொடங்கினர். இவ்விதமாக ஐந்து குடும்பங்களும் ஆதிதிராவிடனுங் கோட்டைமேட்டை விட்டுக் கோட்டைப்பாளையமுற்றனர். இந்த விருவிக்காடே கோட்டைப்பாளையமாயிற்று. இதுவே வடுகர்களுக்கு அர்ச் மதலைமரியம்மாளால் காட்சிக் கொடுத்துக் குறிக்கப்பட்டவிடம். இதுவே நமதன்னையான அர்ச். மதலைமரியம்மாள் நம் முன்னோருக்குக் காட்சியளித்துத் திருக்கோயிற்கொண்ட வரலாறென்பதை நம் வாசகர்கள் கவனத்தில் வைக்கவேண்டும்.

---

# இரண்டாம்பாகம்.

## பின்னிகழ்ந்தவை.

---

இவர்கள் கோட்டைமேட்டை விட்டுவந்த சில வருஷத்தில் அங்கு பலவாறு இன்னல்களுந் துன்பமும், தெய்வ சங்கற்பத்தாற் காலரா முதலிய நோய்களும் பரவவே, அவர்களுக்குப் புத்திவந்து, தங்களுக்கு வேறிடமும் பக்கத்துணையுமில்லாமல் தவித்தவர்களாய் இக்கோட்டைப்பாளையம் வர உத்தேசித்து, இவர்களை யண்டிப் பிழைக்க வெண்ணங்கொண்டு நம் மாபெருந்தலைவரை யண்டினர். தங்களுக்கு முன் செய்த தீமைகளை யொருசிறிதும் எண்ணாதவர்களாய்த் தங்கள் தம்பி முதல் மற்றவர்களும் பேருதவிசெய்து, சற்று வடக்கில் இவர்களுக்கு இடப்புதிக்கிக் குடியிருக்க இடவசதி செய்துகொடுத்துக் கோட்டைமேடென்னும் பழைய நாமத்தையே சூட்டினர். இத்தகைய பேருதவிகளையும் ஒத்தாசைகளையுங் கண்ட இந்துக்கள் நன்றி மறவாதவர்களாய் எக்காரியங்களிலும் எவ்விதக் கலகவழக்குகளிலும் இவர்களில் ஒருவரையாவது வைத்தே நடத்தி வந்தார்கள். இவர்களது கடைசி தம்பியாகிய இந்துவாயிருந்தவர்க்கு ஆண்சந்ததி யற்றுப்போய் ஒரு பெண் சந்ததிமட்டுமிருந்ததால், தன் மருமகனையே தம் ஆஸ்திபாஸ்திக்கும் தங் குலதெய்வத்திற்கும் வேண்டியவைகளைச் செய்யும்படி ஏற்படுத்திக்கொண்டதோடு, அவரின் பட்டப்பெயராகிய கம்பால்நாயுடுஎன்ற நாமத்தையுங் கொடுத்து விட்டார். அவர்களுடைய உற்சவாதி முதலிய பெரும் நாட்களில் பெரியவருடைய மகனையே அவர்கள் அழைத்துக்கொண்டுபோய் மரியாதைநடத்தலும், விவகார விஷயங்களிலும் பழமைபோல்தேசாயிகளாய் நின்று விசாரணை நடத்துதலும் நடந்துகொண்டே வந்தது. அன்றியும் இந்துக்களின் மாரியம்மன் உற்சவநாட்களில் அலகுகுத்துதல்முதலியவைகளில்இவர்களில்ஒருவரையே மேளதாளங்களுடனும் மேரைமரியாதையுடனும் அழைத்துக்கொண்டுபோய் ஆசனத்திருத்தியவர்களே அலகெடுத்துக் கொடுக்கும்படியும் ஆதிமுதல் 1912௵ வரையிலும் நடந்துவந்தது. ஆனால் அவ்வழக்கம் அப்போதிருந்த சங். சுவாமிமாரால் வற்புறுத்தப்பட்டு நின்றுபோய்விட்டது. கிராமமுனிசிப்வேலையுங் கோயில் மணிய முதலிய வேலைகளும் இவர்களாலேயே

நடத்தப்பட்டுவந்தது. தற்போது இக்குடும்பத்தில், இப்பதியிலிருப்பவர்கள் மாஜி முனிசீப் சரவப்பநாயுடு அவர்களின் பேரன்மார்களாகிய முத்துநாயுடு, இராஜுநாயுடு, இராயலுநாயுடு என்பாரும் அவர்களது பௌத்திரர்களுமேயாவர். மற்றையோர் திருச்சி, புதுவை, பெங்களூர், சென்னை, மதுரைமுதலியவிடங்களிற் பரவியிருக்கின்றனர் என்றாலும் இவர்கள் தங்கள் பூர்வஸ்தலத்தையும், இவர்களை ஆண்டு ஆட்கொண்ட அன்னை மதலேமரியம்மனையும் அறவே தெரியாதிருக்கின்றனர். மேலும் இனிமேலாவது இத்திவ்யஸ்தலத்தைக் கண்டானந்திக்க வேண்டுமென்ற பேரவாவே இம்மட்டும் எழுத நேர்ந்தது.

இப்படிக்கு

மதலேமரியம்மனின் தாசானுதாசன்,

ஏ. பொன்னுசாமி நாயுடு.

---

## அர்ச். தேவமாதாவின்பேரில்

# பஞ்சரத்னம்.

---

### வெண்பா.

தேவ்வுலகம் போற்றுந் திருமரிமே லோரைம்பாப்
பூவுலகி லேபாடப் பொன்னுட — மேவி
யருளுவாய் நற்றமிழை ஆயே யிதயத்
திருளகல வெற்கே யிதம்.

---

### இருபதின்ன்குசீராசிரிய விருத்தம்.

## ப ஞ் ச ர த் ன ம்.

உலகுபுக முன்னைநீ யுடுவணி சிரத்திநீ உத்தமகு ணகாத்தி
ஒன்றான தெய்வமீ புத்ரீநீ பத்தினி ஓதுமவனற் றாயுநீ
அலகைதலை தேய்த்துநீ கலகவினை போக்கிநீ அன்பர்கட் கின்பமும்நீ
அன்றாதி தோப்பினிற் குன்றா துரைத்தவெம் மாபிரிய தத்தமும்நீ
இலகுமா லூர்துமலை யேறிநிற் பவளுநீ ஏரொளிரு வானுலகுநீ
ஏரணிநீ காரணிநீ சீரணிநீ பூரணிநீ ஏழையோர்க் காந்தாரணி
கலியகல வேயுமை யடைந்த வெமையாதரி கற்பிலுயரும் மாமணி
கந்தமிகு மேகோட் டைப்பாளையந் தன்னிலுறைகன்னியாமன்னைமரியே. 1

என்வயிறு காத்தற்கே யந்நியர்க் களவிலா விடையூறி ழைத்தபாவி
எதிரின்றி யெவரையும் முட்பட்டு நிந்தைகூ றேழைமதி பெற்றபாவி
பொன்பொரு ளளிப்பரென்றா லவர்களின்புறப் பொய்கோடி சொற்றபாவி
புனைசுருட் டுத்திருட் டோடுகோட் புறணிகட் பொழிமேக மானபுல்லன்
தன்மகுண மோசிறிது மற்றவன் பற்றவன் தவமறி யாதபாவி
தயைசீலி மிதுநூலி யனுகூலி புகழ்ஞாலி தனயனெற் கானவேலி
கன்மவினை போக்குவாய் நன்மைபெற வாக்குவாய் கர்பிலுயரும் மாமணி
கந்தமிகு மேகோட்டைப்பாளையந் தன்னிலுறை கன்னியா மன்னைமரியே. 2

எண்ணறு வரத்திநீ யெவர்புகழ் திறத்திநீ ஏதநீக்கு முறத்தி
எழிலார் முகத்திநீ யிகலறு பதத்திநீ எல்லாமு னுள்ளுடைத்தி
விண்ணொளி பாத்திநீ விடியக க்ஷேத்ரிநீ வேதவே தாந்திநீயே
விளங்குசந் திரனுநீ விரிகதிர்ப் பானுநீ விண்ணு மண்ணும் யாவும்நீ

தண்ணளி கரத்திநீ தயைமிகு திறத்திநீ தனியனாடக் களத்திநீ
தாராதரி நிராதரி புராதரி பராபரி தமியனெனை வந்தாதரி
கண்ணுளமர் சோதிநீ யென்னுளமர் மாதுநீ கற்பிலுயரும் மாமணி
கந்தமிகு மேகோட் டைப்பாளையந் தன்னிலுறை கன்னியா மன்னைமரியே.3

குருபத்தி யற்றவன் குணமெலாம் விற்றவன் குவலயத் திழிவுற்றவன்
கோதுநிறை வானயான் தீதுமிகு சீலனான் கொடியவர்க் கனுகூலனான்
இருணத்தி நிற்பவன் இறையில்லை யென்பவன் இதயத்திரக்க மில்லான்
ஈகையென் றோதமன மொப்பாத தப்பிலி யெவரீயி னுஞ்சகிக்கான்
பருவத்திலே செய்தபாவமும் லோபமும் பற்றிப்பிடிப்ப தறியாப்
பகுமூடன் குடிகேடன் தடிமாட னிடுகாடன் பாதகமிகுத்த மடையன்
சருவத்தி லண்ணா யினுமெனைக் காப்பவே கற்பிலுயரும் மாமணி
கந்தமிகுமேகோட் டைப்பாளையந் தன்னிலுறை கன்னியா மன்னைமரியே.4

சந்தமிகு பாத்திரஞ் சங்கைமிகு க்ஷேத்திரஞ் சர்வஞானப் பீடநீ
சத்திநீ முத்திநீ பத்திநீ சித்திநீ சமஸ்த கோட்டிக ளாயுநீ
அந்தமதி லேயெனக் காபந்திருந்து முன்னப்பனடி வேண்டுமென்றாய்
அதிகாரி துதிபாரி மிகுநேரி தருசீலி அடியனைக் காக்கும்வாரி
சொந்தமென வேயும்மை யிந்தரை யடைந்தனன் சோகமினி யுண்டுகொல்லோ
சுந்தரி நிரந்தரி புரந்தரி வரந்தரி சுகானந்த கிர்பாகரி
கந்தர மெனப்பொழிந் திந்தரை வரந்தருங் கற்பிலுயரும் மாமணி
கந்தமிகு மேகோட் டைப்பாளையந் தன்னிலுறை கன்னியா மன்னைமரியே.5

---

வெண்பா.

சூசையா மாலை துணைவிக்கிங் கேசூட்ட
ஆசையுற் றேனென்னை யாளுமே — நேசமுடன்
ஆறுதிரி யேகனிட மாசிபெற வேகமன
மாறுதலி லாதவெனை யாள்.

---

இராகம் – கல்யாணி, தாளம் ஆதி.

பல்லவி.

உதவிசெய்திடவேணும் அன்னாயெனக்
குதவிசெய்திடவேணும்

அநுபல்லவி.

உதவிசெய்திடவன்றோ ஒருமகன்றனையீன்றாய்
பதவியளிக்கவென்றே பரமனைப்பயந்துநின்றாய் (உ)

சரணங்கள்.

உத்தமத்தாயென முன்னாலே இந்த
உப்பர்குறியாததாற் பின்னாலே பெரு
நித்யநரகத்திற்கு தன்னாலே யவர்
நெருப்பிலழுந்தினரே யுன்னாலே இனிச்
சுத்தபரமனித யத்துளிருந்தவுனைத்
துத்யந்துத்யமம்மா நித்தந்துதிப்பேன்சும்மா (உ)

நிரயம்விழுந்தபேயை யெத்தி இந்த
நீணிலத்ததன்தலை மொத்தி வந்த
குறைதனைநீக்கிய சித்தி எனக்
குதவியளிப்பாய்வ ரத்தி உமைச்
சிரம்பணிந்தேற்றியே காமிகக்கூப்பியே
சுத்தநிர்மலமாக நித்தமுந்துதிப்போமே (உ)

அண்டரெல்லாம்போற்றுந் தாயே எம்மை
அமலன்சொற்படிகாத்தாள் நீயே அம்மா
வண்டத்தனமதாக சேயே உன்னை
வழுத்தினும்நீபொறுப் பாயே நாளும்
அண்டிவந்துன்பதங் கண்டுநமஸ்கரித்தேன்
பண்டுகாத்ததுபோல் இன்றுங்காத்திடவேணும் (உ)

பகைக்கும்பைசாசமதைக் கிட்டி உன்றன்
பைங்கரத்தாலதை வெட்டி ஜெயம்
மிகுக்கும்படியுன்பாத மொட்டி யம்மா
வினையைத்தவிர்த்தாள்வாய் தட்டி இன்று
விடுவதில்லையுன்பாதம் தொடுவதில்லையோவேதம்
வித்தகியுன்பெருமை மெத்தவறிவேனம்மா (உ)

பாலன்பொன்னுசாமிக்கே இன்று உன்றன்
பாதசேவைதரவே நன்று இந்த
ஞாலமதனிலம்மா என்றும் இனி
நானுனைப்போற்றிசெய்தே நின்று அருங்
கோட்டைப்பாளையந்தன்னை நாட்டம்வைத்துற்றாயே
வாட்டமில்லாமலெங் கோட்டமறுப்பாயே. (உதவி)

---

## அர்ச். மரியமதலையம்மாள்பேரில்

# பஞ்சப்புஞ்சம்.

---

### வெண்பா.

பவன முதலாய் பல்லுயிரைக் காக்குங்
கவன முடையானைக் கையேற் — றிவனுறையு
மன்னா யுனதடிக்கோ ரைம்பாப் புகலவே
யென்னா வினில்வந் திரு.

---

### பதினான்குசீராசிரிய விருத்தம்.

உலகமதி லேபாவ விருளதாற் சூழ்ந்துமே உண்பது முறங்குவதுமாய்
ஒன்றுக்கு முதவாத பொம்மையாய் நிரயமே உறுமெரி கரும்பதாக
நிலைபெற்ற பாவிகளு மேயண்ணல் தண்ணடி நீடூழி வாழ்வரென்றும்
நீதிநீ காட்டினாய் உண்மைநிலை நாட்டினாய் நித்யனடி முடிசூட்டினாய்
அலகைவினை நீக்கியெமை யாதரித்தாளவே அன்னைமரி மதலையுற்றாய்
அவனிதனி லோரத்ந மயமான பீடமதில் அம்மணி யெழுந்தருளியே
குலையாத சித்தவை ராக்யமொடு பக்தர்கள் குழுமியுனை நாடிநின்றோம்
கோட்டமெல்லாமறுத்தோட்டிடவரமருளும்கோட்டைப்பாளையத்தம்மையே.

அரியவுன் றிவ்யதிரு நாளதனி லம்மையே அன்புருவதான பக்தர்
அனைவோரு மேகூடப் பலகோடிசூரியர் அகிலமதி லுற்றதென்னா
பெரியாத மீதுனை யிருத்திப்பல் வாத்தியப் பேரொலி முழங்கியார்ப்ப
பேசரிய வாணமத் தாப்புபூக் குத்தியும் பிரபல்யமா மவுட்டும்
உரியநற் செபமொடு வாழ்த்தலும் வேண்டலும் உம்பருங் கண்டுமகிழ்வான்
உதயகாலச் சூர்ய னாமெனத் தேர்மீது ஒய்யாரமாக நிற்போய்!
குறைகின்ற வரமெலா மேயளித் தாளவே கூடியுனை வாழ்த்துகின்றோம்
கோட்டமெல்லாமறுத்தோட்டிடவரமருளும்கோட்டைப்பாளையத்தம்மையே.

அகிலமதி லேமுடி தரித்தபெரு மன்னர்கள் ஐயகோ போர்செய்வதும்
அருமை யறியாது பலகோடி ஜீவன்களு மலறிவீழ்ந் தேமாய்வதும்
புகலரிய தேவாதி தேவனுறை யாலயம் புண்ணிய மிகுந்தக்ஷேத்திரம்
பூர்வமிகு ஸ்தலமெலாம் பாழாகி நிற்பதும் புதைபொருட் பறிபோவதும்

ஜெகமெலா மழியுமோ வம்மம்ம தாங்கிலேம் சற்றுநீ தயவுசெய்தே
சஞ்சல மெலாநீக்க வந்தருட் புரிவையேல் சமாதான நிலவுமன்றோ
குகையதனி லேயா னிருந்தாலு முனைவிடுவேனோ குற்றந்தவிர்த்த மதலாய் !
கோட்டமெல்லாமறுத்தோட்டிடவரமருளும்கோட்டைப்பாளையத்தம்மையே.

சூதுநிறை பூலோக வாழ்வருவது மெய்பொயென தோன்றவில்லை யென்னசெய்
சுந்திரமிருந்த வானந்தி பகலில்லையே சுதருமனை தாயு நேயர் [வேன்
வாதுபுரி யாசையா லுற்றபொன் பொருளொடு வையமோடுள்ள வெல்லாம்
வகை மோசமாகாது காத்தாளு மன்னையே வாழ்விக்கு மத்துஞ்சலில்
தீதுறுமென் மனதிற்குக் கோட்டைதானில்லையே சிந்திப்பி னிலைகாண்கிலேன்
செய்யரிய தாந்தவம தன்றியில்லை யென்றுநீ சேர்ந்ததையோ குகையிடுக்கில்
கோதற வேநீத்த வுன்னடிமலர்ப் பணிகின்ற குருடர்க்கு மவ்வண்ணமே
கோட்டமெல்லாமறுத்தோட்டிடவரமருளும்கோட்டைப்பாளையத்தம்மையே.

பொல்லாத கிரிகைபல செய்திருந்தாலுநீ பொன்னக ரோனடி வீழ்ந்துமே
புரையாதி பவமெலா நீங்குமென் றவர்பதம் புதுக்கினுப் கண்ணீரதாற்
செல்லாத யீகைபல செய்பவர்க் கறிவூட்டத் தேர்ந்துநீ யந்நாளதில்
ஜெகமீது வந்தநச ரேயனையு மெண்ணையாற் செய்வித்தாய் ஸ்நானமதுபோல்
எல்லோருமே செய்து மோட்சசாம் பிராச்சியத் தெஞ்ஞான்றும் வாழவென்றே
எங்களிரு கண்மணி மதலைமரி யம்மணி ஏழையெற் காவம்மணி
கொல்லாத விரதமே பூண்டுநின் றுயதாற் குறுகினோம் வினைதீரவே
கோட்டமெல்லாமறுத்தோட்டிடவரமருளும்கோட்டைப்பாளையத்தம்மையே.

---

இராகம் – கல்யாணி, தாளம் ஆதி.

பல்லவி.

சுந்தரி மதலை னென்னுதாரி
சுகுந்த குணுளசீரி ஒய்யாரி

அநுபல்லவி.

பங்கேருகபத சுகுணவிசாலி
நங்காயெமையா தரி சுபசாலி (சுந்)

சரணங்கள்.

தோணி மரணநதிக் கேணி யமுதரஸ
மானி யலகை ப்ராண ஹானி யெமக்குதய
பானி வரம்பொழியும் வாநீ மகதலாவூர்க்
கோனி யடைக்கலமா வாநீ யெம்ராணீ (சுந்)

நாரி நன்மை ப்ரவாஹ வாரி சகலபவச்
சீரிச் சமஸ்தருக்கு தாரி ஹிதயமகிழ்
நேரி உலகம்புகழ் வீரி யலகையின்சம்
மாரி கோட்டைப்பாளையக் காரி யெம்மனோஹரி (சு)

சீலி சத்தியமறை ஞாலி யெம்மனோர்க்கனு
கூலி வித்துவஜனர் வேலி மகாமகுத்வ
சாலி யெமக்குதவு மூலி யென்றென்றுமுனைக்
கோலி வந்தேகிர்பை பாலி யெனக்குநூலி (சு)

வந்தே யெனக்குதவி தந்து சகலதுயர்
நொந்து யெனைவிட்டுப்பெ யர்ந்து விலகிவிட
உந்த னருளென்க்கு கந்து தயவுபுரி
கந்த கோட்டைப்பாளையஞ் சொந்தமதாகவந்த (சு)

---

# பின்னுரை.

---

எங் குலாபிமானச் செல்வச் சீமான்களே !

இனி நாம் செய்ய வேண்டுவதென்னே ?

இப்பென்னம் பெரியாரான கம்பால்நாயுடு அவர்களின் அருமையான குடும்பத்தில் நங் கௌரீ குலாதிபக் கிறீஸ்துவமக்கள் எவ்வகையிலுஞ் சேர்ந்திருக்கிறார்களென்பதை யொவ்வொருவரும் ஒரு சிறிது யோசனைசெய்யக் கேட்டுக்கொள்ளுகிறேன். (1) இக் கோயில் பிரதமதர்மகர்த்தாவும், கிராம மாஜி முனிசீப்பாயிருந்தவருமான மாஜி சரவப்பநாயுடுவின் பங்காளிகள் யாரென ஒரு சிறிது கவனித்தால், (2) இக்கோயில் உபதேசியார்கள் வழிவழித்தோன்றலாம். திருச்சி மாஜி இஞ்ஞாசி முத்துநாயுடு அவர்களும், அவர்கள் முன்னோருமாகின்றனர் ; (3) அவர்கள் பங்காளிகளாகப் பிறந்தாரெவரெவரென யூகித்தால், நமது குலதிலகப்பெருமானும் மைசூர் சமஸ்தானத்தின் திவானுமாயிருந்து காலஞ்சென்ற ராஜதர்மப் பிரவீண தி. ஆ. தம்புசெட்டியார், C. I. E. அவர்களுடையவும், ஸ்ரீமான் தி. ரா. தனசாமிசெட்டியார் அவர்களுடையவும் தந்தையுமான மாஜி இராயலுசெட்டியார் அவர்களேயெனத் தெரிகின்றது; (4) இக் கோயில் மணியம், கிராம முனிசீப்புமாயிருந்த மாஜி பிச்சைமுத்து நாயுடும், அவர்கள் தம்பி புதுவை தம்புநாயுடும், புதுவை கஸ்தூரி கோண்டப்ப தம்புசெட்டியாரின் முப்பாட்டனாகிய கோண்டப்பநாயுடுமாவர் ; (5) தற்காலம் திருச்சியிலிருக்கும் லாலாவென்றழைக்கப்படும் மகா-ள-ள-ஸ்ரீ இராஜுநாயுடும் மேற்படியாரவர்களது புத்திரர்களுமாவர். இதுவன்றி கருமநாயுடுவின் குடும்பத்தாருமாகின்றனர். இன்னும் அறியப்படாத பங்காளிகளாயுள்ள மற்றவர்கள் தயவுசெய்து அறிவித்தால் இவர்களது கோத்திரக் குறிப்பொன்று தயார் செய்வதுடன், இவர்களது சம்பந்த வழியாரையும் வெகுசுலபமாய்க் கண்டுபிடிக்க வகையேற்படும். அநேகமாய், எல்லாக் கௌரீகுலக் கிறீஸ்துவர்களும் இக்குடும்பத்திற் கலந்திருப்பதாகவே காணப்படுமென்பதிலும் ஐயமிலது. சற்றேறயுற்றுக் கவனித்தால் ஆபிரகாமுக்குத் தேவதேவன் திருவருள் புரிந்ததுபோலத் தேவதாயின் சலு

கையால் கம்பால்நாயுடு அவர்களுக்கு அடைக்கலப் பெட்டகமாகவந்த அர்ச். மரியமதலேயம்மாளின் திருவருளும் விளங்காமற் போகாது. எனவே நமது பாதுகாவலியால் ஒன்று யிணைக்கப்பட்டுக் கிடக்கும் நாமெல்லோரும் ஒன்றுசேரவும் ஒருமந்தையாகக் கூட்டி அரவணைக்கவுமே இக்கோட்டைப்பாளையம் இன்னுமிருக்கின்றதென்பது கனவினும் மறக்கப்படாதொன்றேயாகும். அடிக்கடிவரப்போக இயலாதவர்களும் வருடத்தில் ஒருமுறையாயினும் சிற்சில வருடங்களுக்குப் பின்னுயினும் நமது பரிசுத்தக் காவலியின் திவ்யதரிசனையடையவும், இலௌகிகாதி விஷயங்களில் நம் முன்னேற்றத்தை முன்னிட்டுக் குறிக்கப்பட்ட காலத்தில் ஒன்றுகூடி நடக்கவுங்கூடியதேயன்றோ!

அக்காலத்தில் யூதர்களெல்லாம் ஜெருசலேமிற் கூடியதுபோல, நாமும் ஒன்றுசேர்ந்து நமதன்னையை மனதார வாயாரப் போற்றிப் புகழவேண்டாமா? அவ்வன்னையின் மக்களேயெனக் காட்டவேண்டாமா? என்றால் இதற்குத் தக்க வசதிகள் அக்குக்கிராமத்தில் உளதோவென்னில், தற்போதில்லையாயினும் இதை ஏற்படுத்திக் கொள்ளல் நம் பெருமக்களுக்கு அரும் பெருங்காரியமன்றே! அன்றியும் நமதன்னையின் திருக்கோயிலைச் சிறப்பிப்பதும் வேண்டியனசெய்வதும்நமதுகடமையன்றோ? மறந்திருந்தமட்டில்போகட்டும், இனியுமப்படியிருத்தல் தகாதென்று வலியுறுத்துகின்றேன். மாமரியும், மதலேமரியும் திருச்சிலுவையடியில் ஒன்று சேர்ந்திருந்ததை நாமறியாததல்ல. அப்படியே நம் மாபெருந்தலைவருக்கும் திருக்காட்சியளித்திருக்கின்றனர். அப்படியே இக்கோயிலிலும் எழுந்தருளியுள்ளார்களென்பதில் ஐயமென்னே? இப்பூர்விகஸ்தலத்தின் உண்மைமாட்சியையுணர்ந்து, நமது மரபினர்க்கு உரியபொதுஸ்தலம் இதுவேயென்பதைநான் அறிவிக்கவும்வேண்டுமோ? இவ்விஷயங்களைப்பற்றிய விபரமறிந்தவர்கள் தயவுசெய்துஎனக்கேனும் புதுவையில்நம்குலாபிமானச் செல்வர் ஸ்ரீமான் தர்மராஜ் கோண்டப்பசெட்டியாரவர்களென்றழைக்கப்படும் சவியேதேகோண்டப்பாவுக்கேனும் அனுப்பிவைப்பது நலம். இனிமேல் இக்கோயிலைப்பற்றி செய்யவேண்டுவனவெல்லாஞ் செய்ய முன்வரவேண்டும். இது நம்குலாபிமான முன்னேற்றத்திற்கு அடிப்படையாகுமென்பதைநான் அறிவிக்கவேண்டுவதில்லை. ஏனென்றால் இவர்கள் தரிசனைக்குத் தக்கபடி தேவதாய் சுரூபத்தையும், அர்ச். மரியமதலேயம்மாள் சுரூபத்தையும் ஒரேயளவிற்செய்து மிகப்பூச்சியத்

தோடுவைத்து வந்தித்துவருங் காலத்தில், குதிரைக்காரன் கலகத்தின் போது மற்ற எல்லாச் சுரூபங்களையுந் தங்கள் ஆஸ்தி பாஸ்திகளையும் விட்டுவிட்டு அருகிலிருந்த மலைக்கோடி மறைந்தகாலத்தில் இவ்விரண்டு திவ்ய சுரூபங்களைமட்டும் மலைக்கெடுத்துக்கொண்டுபோய் புதருள்மறைத்து வைத்திருந்தனர். மீண்டுமவர்கள் திரும்பி யூரையடைந்தபோது வைத்தவிடந்தெரியாது மிகத் துக்காக்கிராந்தர்களாய் மலையெலாந்தேடி யலைந்து, ஒரு குரும்பனால் அறிந்து மிக்கக் குதூகலத்துடன் மேள தாள மத்தாப்புக்களுடன் சென்று திருச்சப்பிரத்திலமாச்செய்து பெருவிழாக்கொண்டாடிக் கோயிலில் சேர்த்துள்ளார்கள். அவை இல்லாக் காலத்தில் அவர்களடைந்த சோகம் அளவற்றதெனக்கூறியுள்ளார் நம்பெரியோரானதால், அவர்கள் திவ்யதரிசனை முற்றும் உண்மையாமெனக் கொள்ளவேண்டுமென்று நங் குலாபிமானிகள் கருதவேண்டுமென நமது வாசகர்கள் அறிவார்களாக.

## வாழி விருத்தம்.

வையமதிற் சேசுமரி சூசையோடு
வளர்பாப்பு மேற்றிராணி தேசிகட்கும்
செய்யரிய தவம்புரியுங் கன்னியர்க்கும்
ஜெகம் புகழு நம்மதலை மரியனைக்கும்
தொய்யலறு மிதைப்படிப்போர் கேட்டோருன்றித்
தொல்பதியி லுள்ளோரு நன்குவாழி
ஐயமறச் சரிதைசொலும் பொன்னுசாமி
யவன்குடும்ப மெஞ்ஞான்றும் வாழ்கமாதோ.

இப்படிக்கு மதலைமரிதாசன்
ஏ. பொன்னுசாமி நாயுடு,
Headmaster, R. C. School,
Kottapalayam,
Mettur P. O.,
via Turayur (Trichy.)

---

